8953

AL/2019/22/T-I(OLD)



පැරණි නිර්දේශය/பழைய பாடத்திட்டம்/Old Syllabus

OLD

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

භූගෝල විද්‍යාව I
புவியியல் I
Geography I

22 T I

2019.08.28/ 1300 - 1500

පැය දෙකයි
இரண்டு மணித்தியாலம்
Two hours

சுட்டெண் : ..........................

**அறிவுறுத்தல்கள் :**

* இவ்வினாத்தாள் **இரண்டு** பகுதிகளைக் கொண்டுள்ளது.
* **பகுதி I, 30** பல்தேர்வு வினாக்களைக் கொண்டுள்ளது. பகுதி **I** இற்கான விடைகள் **இவ்வினாத்தாளிலேயே** எழுதப்பட வேண்டும்.
* **பகுதி I, பகுதி II** ஆகியவற்றுக்குரிய விடைத்தாள்கள் ஒன்றாக இணைக்கப்பட்டு கையளிக்கப்பட வேண்டும்.

**பரீட்சகரின் உபயோகத்திற்கு மட்டும்**

| | வினா இல | புள்ளிகள் |
|---|---|---|
| பகுதி I | 1 - 30 | |
| பகுதி II | 1 | |
| | 2 | |
| | 3 | |
| மொத்தம் | | |

| | கையொப்பம் | குறியீட்டு எண் |
|---|---|---|
| 1 ஆவது பரீட்சகர் | | |
| 2 ஆவது பரீட்சகர் | | |
| மேலதிக பிரதம பரீட்சகர் | | |
| பிரதம பரீட்சகர் | | |
| எண்கணிதப் பரிசோதகர் | | |

## பகுதி I

● ஒவ்வொரு வினாவுக்குமான சரியான விடையினைத் தெரிவு செய்து, அதற்குரிய **இலக்கத்தினை** எதிரேயுள்ள **புள்ளிக்கோட்டில்** எழுதுக.

**1.** இலங்கையின் 1: 50,000 இடவிளக்கப் படமொன்றில் நிறத்தினால் மட்டும் நிறந்தீட்டிக் காட்டப்பட்டுள்ள **மூன்று** பண்பாட்டு அம்சங்களை உள்ளடக்கும் சரியான தெரிவு யாது?
(1) நெல் வயல், தெங்குப் பயிர்ச்செய்கை, வெளியரும்பு பாறை
(2) அமைக்கப்பட்ட பகுதி, வீட்டுத்தோட்டம், நெல் வயல்
(3) பிரதான வீதி, புதர்கள், தேயிலைப் பயிர்ச்செய்கை
(4) இறப்பர் பயிர்ச்செய்கை, அடர்சேறு, வெளியரும்பு பாறை
(5) பாலம், சுரங்கவழி, புல்நிலங்கள் (......)

**2.** செய்முறைப் புவியியலில் தரவுகளை எடுத்துக்காட்டும் பிரதான **மூன்று** முறைகள் யாவை?
(1) படங்கள், புள்ளிவிவர முறைகள், வரைபுகள்
(2) புள்ளிவிவர முறைகள், வரைபுகள், வெளிக்களத் தரவுகள்
(3) படங்கள், வரைபுகள், வெளிக்களத் தரவுகள்
(4) வரைபுகள், படங்கள், ஒளிப்படங்கள்
(5) புள்ளிவிவர முறைகள், வெளிக்களத் தரவுகள், படங்கள் (......)

**3.** குறிப்பிட்ட வருடமொன்றில் இலங்கைக்கு இறக்குமதி செய்யப்பட்ட மோட்டார் வாகனங்களின் பல்வேறு வகைகளை எடுத்துக்காட்டுவதற்கு மிகவும் பொருத்தமான வரைபியல் முறை யாது?
(1) பிரிக்கப்பட்ட வட்ட வரைபு (pie graph) (2) பல் சலாகை (bar) வரைபு
(3) விலகல் சலாகை வரைபு (4) சதவீத சலாகை வரைபு
(5) விகிதாசார வட்டங்களின் வரைபு (......)

**4.** குறிப்பிட்ட மாதமொன்றின் நாளாந்தச் சராசரி வெப்பநிலை, நாளாந்த இழிவு வெப்பநிலை, நாளாந்த உச்ச வெப்பநிலை ஆகியவற்றினை எடுத்துக்காட்டுவதற்கு மிகவும் பொருத்தமான வரைபியல் முறை,
(1) பல் சலாகை வரைபாகும். (2) கூட்டு சலாகை வரைபாகும்.
(3) எளிய கோட்டு வரைபாகும். (4) விலகல் கோட்டு வரைபாகும்.
(5) பல்கோட்டு வரைபாகும். (......)

[ பக் 2 ஐப் பார்க்க

**5.** புள்ளிப் படமொன்றினை அமைப்பதற்கான மூன்று அடிப்படைத் தேவைகள் யாவை?
(1) படப் பகுதி, புள்ளிப் பெறுமானம், தரவுகள்
(2) புள்ளிகளின் அமைவிடம், இடவிளக்கவியல், படத்தின் அளவுத்திட்டம்
(3) புள்ளிகளின் நிறம், புள்ளியின் பருமன், புள்ளியின் அடர்த்தி
(4) தரவுப் பரம்பல், இடவிளக்கவியல், புள்ளிப் பெறுமானம்
(5) வீதி வலையமைப்பு, புள்ளிகளின் நிறம், புள்ளியின் பருமன் (......)

**6.** பின்வருவனவற்றுள் தொடர்ச்சியான மற்றும் பின்னகத் தரவுகளுக்கான உதாரணங்களை முறையே தருவது எது?
(1) மாறன் மண்டலத்தில் வெப்பநிலை, அமுக்கச் சாய்வு விகிதம்
(2) குறிப்பிட்ட அமைவிடமொன்றின் வெப்பநிலை, மழைவீழ்ச்சிப் பெறுமானங்கள்
(3) நகரமொன்றின் மழைவீழ்ச்சி, நாடொன்றினால் இறக்குமதி செய்யப்பட்ட வாகனங்களின் எண்ணிக்கை
(4) நாடொன்றிலிருந்து இடம்பெயர்ந்தோரின் எண்ணிக்கை, மாவட்டமொன்றில் உள்ள குளங்களின் எண்ணிக்கை
(5) வகுப்பொன்றில் உள்ள மாணவர்களின் நிறை, உயரம் பற்றிய தரவுகள் (......)

**7.** இடமொன்றின் உண்மையான அமைவிடத்தினைத் தீர்மானிப்பதற்கான நவீன படவரைகலையியல் நுட்பமுறை
(1) தொலையுணர்வு ஆகும்.
(2) புவியியல் தகவல் முறைமையாகும்.
(3) இலக்கமுறைப் படமாக்கலாகும்.
(4) பூகோள இடநிலைப்படுத்தல் முறைமையாகும்.
(5) பரவல் தரவு மாதிரியாகும். (......)

**8.** இடவிளக்கப் படமொன்றில் உள்ளடக்கப்பட்டுள்ள சுற்றுவரைப்பட்ட தகவல்களைக் கொண்டிருக்கும் சரியான தெரிவு யாது?
(1) தலைப்பு, திசை, தரைத்தோற்றம், காட்டுப் போர்வை
(2) நிலப் பயன்பாடு, திசை, தலைப்பு, வடிகால்
(3) தலைப்பு, அளவுத்திட்டம், திசை, படப் பகுதியின் அமைவிடம்
(4) குறியீட்டு விளக்கம், அளவுத்திட்டம், நிலப்பயன்பாடு, நிறந்தீட்டல்
(5) நிறந்தீட்டல், தலைப்பு, திசை, தரைத்தோற்றம் (......)

**9.** நவீன படவரைகலையியல் நுட்பமுறைகளின் பொதுவான அம்சத்தினை எடுத்துக்காட்டும் தெரிவு யாது?
(1) இடஞ்சார் தகவல்களை மாத்திரம் உள்ளடக்குகின்றது.
(2) தரவுகளைப் பரிமாற்றம் செய்வதற்கான திறன் இன்மை.
(3) இடமொன்றின் உண்மையான அமைவிடத்தினை எடுத்துக்காட்டும் திறன்மிக்கது.
(4) படங்களை இலகுவாக இற்றைப்படுத்தும் திறன் அற்றது.
(5) பெருமளவான தகவல்களைச் சேமித்து வைக்கக்கூடிய திறன் இன்மை. (......)

**10.** இடஞ்சார்ந்த தரவுகளின் பண்பினை எடுத்துக்காட்டும் தரவுகள் யாவை?
(1) காவித் தரவுகள்
(2) இலக்கமுறைத் தரவுகள்
(3) பரவல் தரவுகள்
(4) இடஞ்சாராத் தரவுகள்
(5) புள்ளி, கோடு மற்றும் பல்கோணி (......)

**11.** கற்கோளத்தில் காணப்படும் மூடிப் படையின் பிரதான அம்சங்களுள் ஒன்று, இது
(1) 1500 km தடிப்பைக் கொண்டதாக விரிவடைந்துள்ளது.
(2) நிக்கல் மற்றும் இரும்பு ஆகியவற்றைப் பிரதானமாகக் கொண்டுள்ளது.
(3) மோகோறோவிசிக் தொடர்ச்சியின்மைக்கு மேல் இடம்பெற்றுள்ளது.
(4) இப்பகுதி முழுவதும் திரவ வடிவில் அமைந்துள்ளது.
(5) புவியின் திணிவில் $2/3$ பகுதியை உள்ளடக்குகின்றது. (......)

**12.** சுண்ணக்கல் பிரதேசங்களில் உருவாக்கப்படும் மூன்று இடவிளக்கவியல் அம்சங்கள் யாவை?
(1) வாடி, புனற்பள்ளம், கசிதுளிப்படிவு
(2) புனற்பள்ளம், கசிதுளிப்படிவு, உவாலா
(3) பகடாஸ், போல்ஜே, கசிதுளிப்படிவு
(4) உவாலா, வாடி, கசிதுளிப்படிவு
(5) கழிமுகம், புனற்பள்ளம், கசிதுளிவீழ் (......)

**13.** பின்வருவனவற்றுள் மலைப் பனிக்கட்டியாற்று அரித்தல் நிலவுருவங்களுக்கான உதாரணம்,
(1) U வடிவப் பள்ளத்தாக்கு, கூர்முடி என்பனவாகும்.
(2) கூர்முடி, நீள்குன்றுகள் என்பனவாகும்.
(3) U வடிவப் பள்ளத்தாக்கு, நீள் மணற்குன்றுகள் என்பனவாகும்.
(4) நீள் மணற்குன்றுகள், படிவுத்திட்டைகள் என்பனவாகும்.
(5) வட்டக் குகை, தளத்திடைக் குன்றுகள் என்பனவாகும். (......)

[ பக் 3 ஐப் பார்க்க

**14.** படை மண்டலத்தின் பிரதான அம்சமாகக் காணப்படுவது,
(1) பல்வேறு வானிலைத் தோற்றப்பாடுகளைக் காண முடியும்.
(2) 96% மான வாயுக்கள் இவ்வலயத்திலேயே செறிந்துள்ளன.
(3) உயரத்துடன் வெப்பநிலையும் அதிகரித்துச் செல்கின்றது.
(4) புவி மேற்பரப்பிலிருந்து 8 - 10 km வரை குத்தாக விரிவடைந்துள்ளது.
(5) படை மண்டலத்தின் மேல் எல்லையில் இடைத்தரிப்பு அமைந்துள்ளது. (......)

**15.** தனியாக்கப்பட்ட தொகுதியொன்றின் பண்பு யாது?
(1) தொகுதியினுள் சக்தியும் பொருட்களும் பரிமாற்றம் செய்யப்படும்.
(2) தொகுதியினுள் சக்தி மாத்திரம் பரிமாற்றம் செய்யப்படும்.
(3) தொகுதியினுள் பொருட்கள் மாத்திரம் பரிமாற்றம் செய்யப்படும்.
(4) சக்தியும் பொருட்களும் தொகுதிக்குள்ளே பரிமாற்றம் செய்யப்படமாட்டாது.
(5) சக்தி வெளியிலிருந்து பெற்றுக்கொள்ளப்படும். (......)

**16.** இலங்கையின் வரண்ட வலயத்துக்குரிய மண் வகைகள் இரண்டினை சரியாகக் காட்டும் தெரிவு,
(1) செங்கபிலநிற லட்டோசோல்ஸ், செம்மஞ்சள் லட்டோசோல்ஸ் என்பனவாகும்.
(2) செம்மஞ்சள் பொட்சோல்ஸ், செம்மஞ்சள் லட்டோசோல்ஸ் என்பனவாகும்.
(3) முதிரா கபில நிற மட்களி மண், செம்மஞ்சள் லட்டோசோல்ஸ் என்பனவாகும்.
(4) ரெகோ சோல்ஸ், செங்கபில புவிமண் என்பனவாகும்.
(5) செங்கபில லட்டோசோல்ஸ், ரெகோசோல்ஸ் என்பனவாகும். (......)

**17.** இலங்கையில் மே - செப்ரெம்பர் காலத்தில் பெறப்படும் மழைவீழ்ச்சி,
(1) வடகிழக்குப் பருவக்காற்று மழை எனப்படும்.
(2) தென்மேல் பருவக்காற்று மழை எனப்படும்.
(3) முதலாவது இடைப் பருவக்காற்று மழை எனப்படும்.
(4) இரண்டாவது இடைப் பருவக்காற்று மழை எனப்படும்.
(5) சூறாவளி மழை எனப்படும். (......)

**18.** கெப்பனின் காலநிலைப் பாகுபாட்டில் 'BW' காலநிலை வகையினால் குறிப்பிடப்படுவது,
(1) அயன மழைக்காடுகள் ஆகும். (2) பாலைவன அல்லது வரட்சிக் காலநிலைகள் ஆகும்.
(3) சவன்னாக் காலநிலை ஆகும். (4) ஸ்ரெப்ஸ் அல்லது வரண்ட புல்நிலக் காலநிலை ஆகும்.
(5) உப அயன கரையோரக் காலநிலை ஆகும். (......)

**19.** ஐக்கிய நாடுகளின் முதலாவது சூழல் மகாநாடு,
(1) 1972 இல் சுவீடனின் ஸ்ரொக்கோமில் இடம்பெற்றது.
(2) 1972 இல் பிரேசிலின் றியோ டி ஜெனிரோவில் இடம்பெற்றது.
(3) 1948 இல் பிரான்சின் பாரிசில் இடம்பெற்றது.
(4) 2009 இல் டென்மார்க்கின் கொப்பனேகனில் இடம்பெற்றது.
(5) 1992 இல் பிரேசிலின் றியோ டி ஜெனிரோவில் இடம்பெற்றது. (......)

**20.** இலங்கையில் காணப்படும் அயன மழைக்காட்டுக்கு ஓர் உதாரணம் யாது?
(1) கன்னெலிய (2) பிதுறுதலாகல
(3) றுகுண தேசியப் பூங்கா (4) ரித்திகல பாதுகாக்கப்பட்ட இயற்கை ஒதுக்கிடம்
(5) யால புகலரண்கள் (......)

**21.** இரண்டாம் உலக மகா யுத்தத்தின் பின்னர் ஏற்பட்ட குடித்தொகை வெடிப்புக்கான காரணம்,
(1) வளர்முக நாடுகளில் சமகாலத்தில் பிறப்புக்களில் குறைவு ஏற்படாத அதேவேளை இறப்பு வீதங்கள் மிகக் கடுமையாக வீழ்ச்சியடைந்ததனாலாகும்.
(2) யுத்தத்தினால் அழிந்த நாடுகளில், மக்களை மீள்குடியேற்றுவதற்காக ஐரோப்பிய நாடுகளில் அமுல்படுத்தப்பட்ட கொள்கைகளினாலாகும்.
(3) வளர்ச்சியடைந்த மற்றும் வளர்முக நாடுகள் இரண்டிலும் மேற்கொள்ளப்பட்ட கைத்தொழில் அபிவிருத்தி நிகழ்ச்சித் திட்டங்களினாலாகும்.
(4) குறைந்தளவான பிறப்புக்களுடன் இறப்பு வீதங்கள் குறைந்ததனாலாகும்.
(5) வளர்ச்சியடைந்து வரும் நாடுகளில் மேற்கொள்ளப்பட்ட குடித்தொகைக் கொள்கைகளினாலாகும் (......)

**22.** செறிவான பிழைப்பூதிய (subsistence) விவசாயம் செறிவாகப் பரம்பிக் காணப்படுவது,
(1) மத்திய தரைக் காலநிலையைக் கொண்ட பிரதேசங்களிலாகும்.
(2) தென் மற்றும் தென்கிழக்கு ஆசியாவின் ஆற்றுப் பள்ளத்தாக்குகளிலாகும்.
(3) ஐக்கிய அமெரிக்காவில் உள்ள பேரேரிப் பிரதேசங்களிலாகும்.
(4) வடமேற்கு ஐரோப்பாவின் தாழ்நிலப் பிரதேசங்களிலாகும்.
(5) அவுஸ்திரேலியாவின் நல்லாபார் சமவெளிப் பிரதேசங்களிலாகும். (......)

[ பக் 4 ஐப் பார்க்க

**23.** ஜீன் கொட்மன் என்பவரினால் இனங்காணப்பட்ட நகரக் கைத்தொழில் இடைவழியான 'பெருநகரக்கூட்டு' விரிவடைந்து செல்வது,
(1) லண்டனிலிருந்து பேர்மிங்காம் வரையாகும்.
(2) டோக்கியோவிலிருந்து யொக்கோகாமா வரையாகும்.
(3) பொஸ்டனிலிருந்து வாஷிங்டன் வரையாகும்.
(4) சிக்காக்கோவிலிருந்து பிற்ஸ்பேர்க் வரையாகும்.
(5) சான் பிரான்சிஸ்கோவிலிருந்து சான்டியாகோ வரையாகும். (......)

**24.** இலங்கையில் நகரமயமாக்கம் குறைந்த மட்டத்தில் காணப்படுவதற்கான பிரதான காரணம் யாது?
(1) குடித்தொகை அடர்த்தியை மாத்திரம் தகுதிவிதியாகப் பயன்படுத்தல்
(2) நிர்வாகப் பிரிவுகளை மாத்திரம் தகுதிவிதியாகப் பயன்படுத்தல்
(3) குடித்தொகைப் பருமனை மாத்திரம் தகுதிவிதியாகப் பயன்படுத்தல்
(4) பொருளாதார நடவடிக்கைகளின் இயல்பினை மாத்திரம் தகுதிவிதியாகப் பயன்படுத்தல்
(5) கைத்தொழில் துறையில் தொழில்புரியும் மக்களின் சதவீதத்தினை மாத்திரம் தகுதிவிதியாகப் பயன்படுத்தல் (......)

**25.** பசுமைப் புரட்சியின் முதன்நிலை நோக்கம்,
(1) மரபுரீதியான விவசாய முறைகளை மீளுருவாக்கம் செய்தலாகும்.
(2) பிழைப்பூதிய விவசாயத்தில் புதிய தொழில்நுட்பங்களைப் பிரயோகித்தலாகும்.
(3) உலகில் பயிரிடக்கூடிய நிலங்களை விரிவாக்கம் செய்தலாகும்.
(4) உணவுத் தானியங்களின் விளைச்சலை அதிகரித்தலாகும்.
(5) சேதன விவசாய முறைகளை மீள் அறிமுகம் செய்தலாகும். (......)

**26.** பின்வருவனவற்றுள் இலங்கையின் விசேட பொருளாதார வலயங்கள் நான்கினைக் கொண்ட தெரிவு யாது?
(1) தம்புள்ளை, மீகொட, கெப்பிட்டிபொல, தம்புத்தேகம
(2) தம்புள்ளை, கெப்பிட்டிபொல, ரன்ன, கொக்கல
(3) தம்புத்தேகம அரலகன்வில, கந்தளாய், கரபிஞ்சா
(4) பியகம, சீதாவாக்கை, பலாங்கொட, எம்பிலிப்பிட்டிய
(5) பள்ளேகல, இரணைமடு, தம்புள்ளை, ஹுங்கம (......)

**27.** பின்வருவனவற்றுள் 18 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தோமஸ் மோல்தஸ் என்பவரினால் எதிர்வு கூறப்பட்ட விடயம் யாது?
(1) எதிர்காலக் குடித்தொகை வளர்ச்சி குறைந்து செல்வதற்கு எவ்வித கட்டுப்பாடுகளும் இருக்கமாட்டாது.
(2) எதிர்காலக் குடித்தொகை வளர்ச்சியினைப் பஞ்சம், நோய் மற்றும் யுத்தங்கள் கட்டுப்படுத்தும்.
(3) எதிர்காலத்தின் குடித்தொகை வளர்ச்சியை கைத்தொழில் விருத்தி கட்டுப்படுத்துவதாக அமையும்.
(4) எதிர்காலத்தின் குடித்தொகை வளர்ச்சிக்கு உணவு நிரம்பல்களின் அதிகரிப்பு உதவுவதாக அமையும்.
(5) ஐரோப்பாவின் குடித்தொகை வளர்ச்சி, அதிகரித்து வரும் குடியேற்றம் மற்றும் குடிவரவினால் கட்டுப்படுத்தப்படும். (......)

**28.** பருமட்டான பிறப்பு விகிதத்திலிருந்து பருமட்டான இறப்பு விகிதத்தினைக் கழிப்பதன் மூலம் கணிப்பீடு செய்யப்படுவது,
(1) மொத்தக் கருவள விகிதமாகும். (2) இடப்பெயர்வின் தேறிய அதிகரிப்பாகும்.
(3) ஆயுள் எதிர்பார்ப்புக் காலமாகும். (4) இயற்கை அதிகரிப்பாகும்.
(5) தேறிய இடப்பெயர்வாகும். (......)

**29.** குடியிருப்புக்களின் படிமுறையொன்றில் காட்டப்படுவது
(1) குடியிருப்புக்களின் வகைகள் (2) குடியிருப்புக்களின் பல்வகைத் தன்மை
(3) குடியிருப்புக்களின் ஒழுங்கு வரிசை (4) குடியிருப்புக்களின் பருமன்
(5) குடியிருப்புக்களுக்கு இடையிலான தூரம் (......)

**30.** தற்பொழுது பெருந்தோட்ட விவசாயம் பரந்தளவில் மேற்கொள்ளப்பட்டு வரும் மூன்று பகுதிகளை எடுத்துக்காட்டும் தெரிவு யாது?
(1) ஐக்கிய அமெரிக்காவின் தென்பகுதி, மெக்சிக்கோ, வட ஆபிரிக்கா
(2) வடமேற்கு ஐரோப்பா, மத்திய ஆசியா, தென்கிழக்கு ஆசியா
(3) தென்கிழக்கு ஆசியா, மரே டார்லிங் பள்ளத்தாக்கு, ஆர்ஜென்ரீனா
(4) வட ஆபிரிக்கா, வட அமெரிக்கா, கிழக்கு ஆசியா
(5) தென் ஆசியா, லத்தீன் அமெரிக்கா, கிழக்கு ஆபிரிக்கா (......)

* *

[ பக் 5 ஐப் பார்க்க

පැරණි නිර්දේශය/பழைய பாடத்திட்டம்/Old Syllabus

OLD

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

භූගෝල විද්‍යාව I
புவியியல் I
Geography I

22 T I

## பகுதி II

அறிவுறுத்தல்கள்:

※ **முதலாம்** வினாவுக்கும் **2** ஆம் **3** ஆம் வினாக்களிலிருந்து **ஒரு** வினாவையும் தெரிந்தெடுத்து **இரண்டு வினாக்களுக்கு மாத்திரம்** விடை எழுதுக.

※ 1 : 50,000 அளவுத்திட்டத்திலமைந்த தம்புள்ளை இடவிளக்கப் படத்தின் ஒரு பகுதியும் இலங்கை மாவட்ட புறவுருவப் படம் ஒன்றும், வரைபுத்தாள் ஒன்றும் உமக்கு வழங்கப்பட்டுள்ளது.

**1.** இலங்கை நில அளவைத் திணைக்களத்தினால் வெளியிடப்பட்ட 1 : 50,000 என்னும் அளவுத்திட்டத்திலமைந்த தம்புள்ளை இடவிளக்கப் படத்தின் ஒரு பகுதி உமக்குத் தரப்பட்டுள்ளது. அதில் சமவுயரக் கோடுகளின் இடைவெளி 20 மீற்றரினால் காட்டப்பட்டுள்ளது. அப்படத்தினைப் பயன்படுத்திப் பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.

குறிப்பு:
※ **படத்தின் மேல் விடைகள் எழுதப்படக்கூடாது.**
※ விடைத்தாளில் தொடர்புடைய **வினா இலக்கத்தினையும் உப பிரிவு இலக்கத்தினையும்** தெளிவாகக் குறிப்பிட வேண்டும்.
※ உமது விடைத்தாளுடன் இடவிளக்கப் படத்தினை இணைக்க **வேண்டாம்.**

(i) **AB** மற்றும் **CD** கோடுகளினால் குறித்துக் காட்டப்பட்டுள்ள நிலவுருவ அம்சங்கள் **இரண்டினைப்** பெயரிடுக. (02 புள்ளிகள்)

(ii) நாற்பக்கல்கள் **E** மற்றும் **F** ஆகியவற்றில் காட்டப்பட்டுள்ள வடிகால் அம்சத்தினையும் நிலவுருவ அம்சத்தினையும் முறையே பெயரிடுக. (02 புள்ளிகள்)

(iii) **G** மற்றும் **H** இனை இணைக்கும் கோடு நெடுகிலும் உள்ள பகுதிக்கான குறுக்குப் பக்கப் பார்வை (cross - section) **ஒன்றினை** வரைக. (இதற்காக 5 ஆம் பக்கத்தில் தரப்பட்டுள்ள வரைபுத்தாளைப் பயன்படுத்துக) (03 புள்ளிகள்)

(iv) வரையப்பட்ட குறுக்குப் பக்கப் பார்வை நெடுகிலும் உள்ள பகுதியில் காணப்படும் இடவிளக்கவியல் அம்சங்கள் **இரண்டினைச்** சுருக்கமாக விவரிக்குக. (03 புள்ளிகள்)

(v) படப் பகுதியில் காணப்படும் இடவிளக்கவியலுக்கும் போக்குவரத்து வலையமைப்புக்கும் இடையிலான தொடர்பினை ஆராய்க. (05 புள்ளிகள்)

(vi) நாற்பக்கல் **J** இல் காட்டப்பட்டுள்ள பகுதியில் மானிட நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்தும் **இரண்டு** காரணிகளைச் சுருக்கமாக விவரிக்குக. (05 புள்ளிகள்)

**2.** (i) நவீன படவரைகலையியல் என்பதனால் கருதப்படுவது யாது? (02 புள்ளிகள்)

(ii) புவியியல் தகவல் முறைமையின் **நான்கு** கூறுகளைச் சுருக்கமாக விளக்குக. (06 புள்ளிகள்)

(iii) தொலையுணர்வினைப் பிரயோகிக்கக்கூடிய **மூன்று** பகுதிகளைச் சுருக்கமாக விளக்குக. (06 புள்ளிகள்)

(iv) நவீன படவரைகலையியல் முறைகளின் **மூன்று** பயன்பாடுகளை விவரிக்குக. (06 புள்ளிகள்)

[ பக் 8 ஐப் பார்க்க

3. அட்டவணை I : இலங்கையின் மாவட்ட அடிப்படையிலான குடித்தொகை - 2012
(ஆயிரத்தில்)

| மாவட்டம் | குடித்தொகை |
|---|---|
| கொழும்பு | 2 324 |
| கம்பஹா | 2 305 |
| களுத்துறை | 1 222 |
| கண்டி | 1 375 |
| மாத்தளை | 485 |
| நுவரெலியா | 712 |
| காலி | 1 063 |
| மாத்தறை | 814 |
| அம்பாந்தோட்டை | 599 |
| யாழ்ப்பாணம் | 584 |
| மன்னார் | 99 |
| வவுனியா | 172 |
| முல்லைத்தீவு | 92 |

| மாவட்டம் | குடித்தொகை |
|---|---|
| கிளிநொச்சி | 113 |
| மட்டக்களப்பு | 526 |
| அம்பாறை | 649 |
| திருகோணமலை | 379 |
| குருநாகல் | 1 618 |
| புத்தளம் | 762 |
| அனுராதபுரம் | 860 |
| பொலன்னறுவை | 406 |
| பதுளை | 815 |
| மொனராகலை | 451 |
| இரத்தினபுரி | 1 088 |
| கேகாலை | 840 |

மூலம் - தொகைமதிப்பு மற்றும் புள்ளிவிபரத் திணைக்களம், இலங்கை, - 2012

(i) கருப்பொருட் படம் என்றால் என்ன? (02 புள்ளிகள்)

(ii) **அட்டவணை 1** இல் தரப்பட்டுள்ள தரவுகளை **ஐந்து** வகுப்புக்களாகக் கூட்டமாக்கி, தரப்பட்டுள்ள இலங்கையின் மாவட்டப் படத்தினைப் பயன்படுத்தி இடகணியப் படமொன்றினை அமைத்துக் காட்டுக. (வகுப்பாயிடையை 446 ஆகக் கருதிக் கொள்க.)
(இதற்காக 6 ஆம் பக்கத்தில் தரப்பட்டுள்ள இலங்கை மாவட்டப் புறவுருவப் படத்தைப் பயன்படுத்துக.) (08 புள்ளிகள்)

(iii) உம்மால் அமைக்கப்பட்ட படத்தில் எடுத்துக்காட்டப்படும் குடித்தொகையின் பரம்பல் பாங்கின் முனைப்பான அம்சங்கள் **இரண்டினை** ஆராய்க. (04 புள்ளிகள்)

(iv) உம்மால் பயன்படுத்தப்பட்ட படவரைகலையியல் முறையின் நன்மைகள் **இரண்டினையும்** தீமைகள் **இரண்டினையும்** ஆராய்க. (06 புள்ளிகள்)

❊ ❊ ❊

8953





පැරණි නිර්දේශය/பழைய பாடத்திட்டம்/Old Syllabus

OLD

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

භූගෝල විද්‍යාව II
புவியியல் II
Geography II

22 T II

29.08.2019 / 1300 - 1610

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்
Additional Reading Time - 10 minutes

வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவுசெய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.

**அறிவுறுத்தல்கள் :**

※ ஒவ்வொரு பகுதியிலிருந்தும் குறைந்தபட்சம் **இரண்டு** வினாக்களையேனும் தெரிவு செய்து, எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு மாத்திரம் விடை எழுதுக

## பகுதி I - பௌதிகப் புவியியல்

1. (i) அகவிசைகள் மற்றும் புறவிசைகள் என்பதனால் கருதப்படுவது யாது? (02 புள்ளிகள்)

   (ii) கற்கோளத்தில் அமுக்க விசைகளினால் உருவாக்கப்படும் **மூன்று** வகையான மடிப்புக்களைச் சுருக்கமாக விவரிக்குக. (06 புள்ளிகள்)

   (iii) கற்கோளத்தில் இழுவிசை நகர்வுகளினால் உருவாக்கப்படும் **மூன்று** வகையான குறைகளைச் சுருக்கமாக விளக்குக. (06 புள்ளிகள்)

   (iv) உயர் அகலக்கோட்டுப் பிரதேசங்களில் இடம்பெறும் பிரதான புறவிசையொன்றினால் உருவாக்கப்படும் **மூன்று** நிலவுருவங்களைப் பொருத்தமான வரைபடங்களுடன் விளக்குக. (06 புள்ளிகள்)

2. (i) ஆற்றுப் பள்ளத்தாக்கொன்றில் அரித்தலினைப் பாதிக்கும் **நான்கு** காரணிகளைக் குறிப்பிடுக. (02 புள்ளிகள்)

   (ii) ஆற்றுப் பள்ளத்தாக்கொன்றில் இடம்பெறும் அரித்தலின் **மூன்று** முறைகளைச் சுருக்கமாக விளக்குக. (06 புள்ளிகள்)

   (iii) ஆற்றுப் பள்ளத்தாக்கொன்றின் மேற்பகுதியில் காணப்படும் **மூன்று** நிலவுருவங்களைச் சுருக்கமாக விவரிக்குக. (06 புள்ளிகள்)

   (iv) ஆற்றுப் பள்ளத்தாக்கொன்றின் கீழ்ப் பகுதியில் படிதலினால் உருவாக்கப்படும் நிலவுருவங்கள் **மூன்றினை** விவரிக்குக. (06 புள்ளிகள்)

3. (i) காலநிலை மாற்றம் என்பதனால் கருதப்படுவது யாது? (02 புள்ளிகள்)

   (ii) காலநிலை மாற்றத்துக்குப் பங்களிக்கும் இயற்கைக் காரணிகள் **மூன்றினைச்** சுருக்கமாக விவரிக்குக. (06 புள்ளிகள்)

   (iii) பூகோளக் காலநிலை மாற்றமானது மானிட நடவடிக்கைகளை எவ்வாறு பாதிக்கின்றது என்பதை **மூன்று** உதாரணங்களுடன் விளக்குக. (06 புள்ளிகள்)

   (iv) காலநிலை மாற்றத்தினால் ஏற்படும் சாதகமற்ற தாக்கங்களை இழிவளவாக்குவதற்கு மேற்கொள்ளப்பட வேண்டிய **மூன்று** நடவடிக்கைகளை விவரிக்குக. (06 புள்ளிகள்)

[பக். 2 ஐப் பார்க்க

4. (i) 'உயிரினக் கூட்டம்' (Biome) என்னும் பதத்தினை வரைவிலக்கணம் செய்க. (02 புள்ளிகள்)

(ii) உலகின் பிரதான உயிரினக் கூட்டங்களுள் ஒன்றினைத் தெரிவுசெய்து அதன் பரம்பலில் செல்வாக்குச் செலுத்தியுள்ள **மூன்று** பிரதான காரணிகளை விளக்குக. (06 புள்ளிகள்)

(iii) மேலே (ii) இல் உம்மால் தெரிவுசெய்யப்பட்ட உயிரினக் கூட்டத்தின் முனைப்பான அம்சங்கள் **மூன்றினை** விவரிக்குக. (06 புள்ளிகள்)

(iv) இலங்கையில் காணப்படும் ஈரநில உயிரினக் கூட்டத்தின் சூழலியல் முக்கியத்துவத்தினை எடுத்துக்காட்டும் **மூன்று** காரணிகளை விளக்குக. (06 புள்ளிகள்)

## பகுதி II - மானிடப் புவியியல்

5. அட்டவணை 1: சர்வதேச இடப்பெயர்வு 1990-2017

| வருடம் | சர்வதேச ரீதியாக இடம்பெயர்ந்தோரின் மொத்த எண்ணிக்கை (மில்லியன்) | அபிவிருத்தி அடைந்த நாடுகளில் (மில்லியன்) | இடம்பெயர்ந்தோரின் மொத்த எண்ணிக்கையின் சதவீதமாக (%) | அபிவிருத்தி அடைந்து வரும் நாடுகளில் (மில்லியன்) | இடம்பெயர்ந்தோரின் மொத்த எண்ணிக்கையின் சதவீதமாக (%) |
|---|---|---|---|---|---|
| 1990 | 152.5 | 82.4 | 54.0 | 70.1 | 46.0 |
| 1995 | 160.7 | 92.3 | 57.4 | 68.4 | 42.6 |
| 2000 | 172.6 | 103.4 | 59.9 | 69.2 | 40.1 |
| 2005 | 190.5 | 116.3 | 61.0 | 74.2 | 39.0 |
| 2010 | 220.0 | 130.7 | 59.4 | 89.3 | 40.6 |
| 2015 | 247.6 | 140.3 | 56.7 | 107.3 | 43.3 |
| 2017 | 257.7 | 146.0 | 56.7 | 111.7 | 43.3 |

மூலம் : United Nations, Department of Economic and Social Affairs, Population Division, Trends in International Migrant Stock - 2017

(i) **அட்டவணை 1** இல் தரப்பட்டுள்ள சர்வதேச இடப்பெயர்வில் இருந்து இனங்காணக்கூடிய **நான்கு** முனைப்பான அம்சங்களைக் குறிப்பிடுக. (02 புள்ளிகள்)

(ii) அபிவிருத்தியடைந்த நாடுகளை நோக்கி இடம்பெயர்வதற்கு மக்களைத் தூண்டும் காரணிகள் **மூன்றினைச்** சுருக்கமாக விவரிக்குக. (06 புள்ளிகள்)

(iii) இடப்பெயர்வின் காரணமாக, சென்றடையும் இடங்களில் ஏற்படும் சமூக - பொருளாதார மாற்றங்கள் **மூன்றினை** விளக்குக. (06 புள்ளிகள்)

(iv) இலங்கையின் குடித்தொகைப் பரம்பலை, இடப்பெயர்வு எவ்வாறு பாதிக்கின்றது என்பதனை **மூன்று** உதாரணங்களுடன் ஆராய்க. (06 புள்ளிகள்)

6. (i) இலங்கையின் பிழைப்பூதிய (Subsistence) விவசாயத்தில் காணப்படும் **நான்கு** முனைப்பான அம்சங்களைப் பெயரிடுக. (02 புள்ளிகள்)

(ii) (அ) இலங்கையில் பின்பற்றப்பட்டு வரும் விவசாயத் தொழில்நுட்பங்கள் **இரண்டினைப்** பெயரிடுக. (02 புள்ளிகள்)

(ஆ) மேலே (ii) (அ) இல் பெயரிட்ட தொழில்நுட்பங்களுள் ஏதாவது **ஒன்றினைத்** தெரிவுசெய்து அது எவ்வாறு இலங்கையின் விவசாய அபிவிருத்திக்குப் பங்களிப்புச் செய்துள்ளதென்பதை **இரண்டு** உதாரணங்களுடன் விளக்குக. (04 புள்ளிகள்)

(iii) இலங்கையில் விவசாய சந்தைப்படுத்தலில் காணப்படும் **மூன்று** பண்புகளைச் சுருக்கமாக விவரிக்குக. (06 புள்ளிகள்)

(iv) உலக விவசாயம் தற்பொழுது எதிர்நோக்கும் பிரதான சவால்கள் **மூன்றினைப்** பரிசீலிக்குக. (06 புள்ளிகள்)

[பக். 3 ஐப் பார்க்க

**7.** (i) கைத்தொழில் அமைவிடத்தினை நிர்ணயிக்கும் **நான்கு** காரணிகளைக் குறிப்பிடுக. (02 புள்ளிகள்)

(ii) மேலே (i) இல் உம்மால் குறிப்பிடப்பட்ட காரணிகளுள் ஏதாவது **ஒன்றினைத்** தெரிவுசெய்து, கைத்தொழில்களின் அமைவிடத்தில் எத்தகைய செல்வாக்கினை அது கொண்டிருந்ததென்பதை **மூன்று** உதாரணங்களுடன் விளக்குக. (06 புள்ளிகள்)

(iii) கைத்தொழில் அமைவிடத்தினை நிர்ணயிக்கும் காரணிகளில் ஏற்பட்டுவரும் அண்மைக்காலப் போக்குகள் **மூன்றினைச்** சுருக்கமாக விவரிக்குக. (06 புள்ளிகள்)

(iv) இலங்கையின் பொருளாதார அபிவிருத்திக்கு ஆடைக் கைத்தொழில் எவ்வாறு பங்களித்துள்ளது என்பதை **மூன்று** உதாரணங்களுடன் விளக்குக. (06 புள்ளிகள்)

**8.** (i) தகவல் மற்றும் தொடர்பாடல் தொழில்நுட்பம் என்பதனால் கருதப்படுவது யாது? (02 புள்ளிகள்)

(ii) தகவல் மற்றும் தொடர்பாடல் தொழில்நுட்பமானது பூகோளமயமாக்கத்துக்கு எவ்வாறு பங்களிப்புச் செய்துள்ளதென்பதை **மூன்று** உதாரணங்களுடன் விவரிக்குக. (06 புள்ளிகள்)

(iii) தகவல் மற்றும் தொடர்பாடல் தொழில்நுட்பமானது, நாடொன்றின் அபிவிருத்திக்கு எவ்வாறு உதவக்கூடுமென்பதை **மூன்று** உதாரணங்களுடன் பரிசீலிக்குக. (06 புள்ளிகள்)

(iv) தற்காலத்தில் தகவல் மற்றும் தொடர்பாடல் தொழில்நுட்பத்துடன் தொடர்புடைய பிரச்சினைகள் **மூன்றினை** உதாரணங்களுடன் விளக்குக. (06 புள்ளிகள்)

* * *

OLD

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

22 I

භූගෝල විද්‍යාව I
புவியியல் I
Geography I




SCALE 1 : 50,000

සමෝච්ච රේඛා අන්තරය මීටර 20
சமவுயரக்கோட்டு இடைவெளி 20 மீற்றர்
Contour Interval 20 metres